9th September 1960]

Sri T. S. RAMASWAMI : ரயில் பாதையே இல்லாத கன்னியாகுமரி ஜில்லாவில் ரயில் பாதை ஏற்படுத்த வேண்டு மென்ற எண்ணத்துடன், திருநெல்வேலி முதல் கன்னியாகுமரி வரை ரயில் பாதை போட வேண்டும் என்று தீர்மானித்து அதற்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் முதலிடம் கொடுத்திருந்ததாகவும், பின்னுல் அது ஆருவது இடத்திற்கு வந்து விட்டதாகவும் சொல்லப்படு கிறதே, அது உண்மையா ? அப்படியானுல் அதற்குக் காரணம் என்ன ? அவ்விதம் ஆருவது இடத்தில் போட்டிருந்தால் அதை மாற்றி முதலி டத்தில் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்குமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : புதிய ரயில்வே லைன்கள் போடுவதைப் பற்றி ரயில்வே உதவி மந்திரியுடன் பேசிக் கொண்டிருந்ததைப்பற்றி சற்று முன்பு சொன்னேன். அதில் முதலிடம் சேலம்-பங்களூர் பாதைக்கும், இரண்டாவது இடம் மானமதுரை-அருப்புக் கோட்டை பாதைக்கும் வற்புறுத்தப்பட்டிருக்கிறது என்று சொன்னேன். அதற்கு மேலாக மூன்ருவது இடத்தைப்பற்றி தகராறு இருக்கவேண்டாம் என்று நினைத்துச் சொல்லவில்லே. மூன்ருவது இடமாக திருநெல்வேலி-கன்னியாகுமரி பாதையை வற்புறுத்துவது என்பது தான் என்னுடைய உத்தேசம்.

*Satyagraha (Socialists)*

* 553 *Q*.—Sri P. S. CHINNADURAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விலேவாசிகளைக் கட்டுப்படுத்தக் கோரியும், மற்றும் பல கோரிக்கை களுக்காகவும் தமிழ் நாட்டின் சோஷலிஸ்டுகள் சர்க்கார் காரியாலயங் களின் முன்பாக சத்தியாக்கிரகம் நடத்திஞர்களா ?

(ஆ) அவ்வாறு சத்தியாக்கிரகம் நடத்தியவர்களை சர்க்கார் கைது செய்தார்களா ?

(இ) அப்படியானுல், அவர்களின் எண்ணிக்கை என்ன ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Yes, Sir.
(*c*) 367.

Sri P. S. CHINNADURAI : இந்த சத்தியாக்கிரகத்தின்போது கைது செய்யப்பட்ட சோஷியலிஸ்டுகள் சிறையில் எந்த முறையில் நடத்தப்பட்டார்கள், அவர்கள் அரசியல் கைதிகள் என்ற முறையில் நடத்தப்பட்டார்களா அல்லது மற்ற சாதாரண கிரிமினல் கைதிகளைப்போல் நடத்தப்பட்டார்களா என்பதைத் தெரிவிக்க முடியுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இதற்கு தனிக் கேள்வி வேண்டும்.

*Railways (electrification)*

* 555 *Q*.—Sri T. SAMPATH : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the stage at which the scheme of electrification of railway line between Tambaram and Villupuram stands;

(*b*) whether the scheme would be implemented before the end of the Second Five-Year Plan; and

(*c*) what power would be used, whether A.C. or D.C.?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) to (*c*) Our information is that the scheme of electrification of railway line between Tambaram and Villupuram has already been started

during the Second Five-Year Plan period and that the ancillary Civil Engineering works connected with the scheme have been practically completed. The system of electrification whether A.C. or D.C. to be adopted is under consideration of the Railway Administration.

SRI T. SAMPATH : May I know, whether the scheme will be completed before the end of the Second Plan period?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : We had recently discussions with the Union Deputy Railway Minister, engineers and officers of the Railways. I am not in a position to say that the scheme would be completed. But they are still groping with it and there seems to be no definite decision regarding the point, whether it is to be A.C. and what is to be done and all that.

SRI R. SRINIVASA IYER : ஸார், சமீபத்தில் பரிசீலிக்கப் பட்ட குழு செய்த முடிவில், முன் மதராஸ்-விழுப்புரம் வரைக்கும் மின்சார ரயில் போடுவதாக இருந்ததை இப்போது செங்கல்பட்டு வரைக்கும்தான் என்று மூன்றாவது திட்ட அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறது. போஸ்ட் அண்ட் டெலிகிராப் டிப்பார்ட்மெண்டுக்கு இருக்கக்கூடிய வசதிக்குறைவினால் மூன்று ஆண்டுகள் காலதாமதம் ஆகும் என்றுசொல்லப்படுகிறது. ஆகவே ஸ்டேஜ் 1, ஸ்டேஜ் 2 என்ற முறையில் மதராஸ்-செங்கல்பட்டு, பின்னால் செங்கல்பட்டு-விழுப்புரம் என்ற அளவிலாவது மின்சார ரயில் நிறுவுவதற்கு இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்தை வற்புறுத்துமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது தாம்பரம் வரைக்கும் மின்சார இணைப்பு இருக்கிறது. விழுப்புரம் வரை இதைக் கொண்டு போக வேண்டும் என்பது தான் திட்டம். ஆனால் பல டெக்னிக்கல் கஷ்டங்களை எடுத்துச் சொல்லுகின்றார்கள். இப்போது தாம்பரம்-செங்கல் பட்டு, செங்கல்பட்டு—விழுப்புரம் என்ற முறையில் எடுத்துக்கொள்ளலாம் என்று சொல்லுகின்றார்கள். அதை நாம் மறுத்துச்சொல்லுவதற்கில்லை. சீக்கிரத்தில் இதைப்பற்றி ஒரு முடிவு செய்வதாகச் சொல்லியிருக்கின்றார்கள். என்னைப் பொறுத்தவரையில் இந்த ராஜ்யத்திலுள்ள மக்கள் இதில் காலதாமதப்படுத்தக்கூடாது என்று வற்புறுத்தி வருகின்றார்கள் என்று சொல்லியிருக்கின்றேன்.

* 556 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்திலுள்ள எந்தெந்த ரயில் பாதைகளை (மின் சார மயமாக்கும் திட்டங்கள்) சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்கள் ?

(ஆ) இத்திட்டங்களிலே எந்தெந்த திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வர மத்திய சர்க்கார் சம்மதித்திருக்கிறார்கள். ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) (1) Tambaram-Villupuram-Tiruchirappalli Section.

(2) Madras-Arkonam Section.

(3) Chingleput-Kancheepuram Section.

(*b*) Tambaram-Villupuram Section.